

# அணுவிரதம்

தனிப் பிரதி ரூ 1-00          ஆண்டு சந்தா ரூ 10-00

மலர் 21          மே 1990          இதழ் 10

## இந்த இதழில்



KMM0558

அணுவிரத இயக்கத்தின் தமிழ் மாத இதழ்

1990 மே மாத இதழ்

சௌ. வந்தனா - சிர. நவீன்

அவர்களின் திருமணத்தை முன்னிட்டு

திரு. சோவன்ராஜ் பிரகாஷ்சந்த்,

திரு. கேவல்சந்த் மாணக்சந்த்,

திரு. கௌதம்சந்த் அவர்களின்

பொருள் உதவியினால்

வெளியிடப்பட்டுள்ளது.

777

#  அணுவிரதம்

( அணுவிரத இயக்கத்தின் தமிழ் மாத இதழ்)

டாக்டர் சா. நெடுஞ்செழியன், எம்.ஏ., பி.எச்டி.,

மலர் 21] மே 1990 [இதழ் 10

அருள் வாக்கு

- ☆ மனித ஒற்றுமையின் வளர்ச்சி
- ☆ கூடிவாழும் கருத்தை வளர்த்தல்.
- ☆ நடத்தையில் நேர்மையை வளர்த்தல்.
- ☆ சுயசோதனை முறையை வளர்த்தல்.
- ☆ சமுதாயத்தில் சரியான மதிப்பீடுகளை வளர்த்தல்.

# மிகுபொருள் சேர்த்தலின் விளைவே போராட்டம்

வினு : அணுவிரதம் மானிட ஒற்றுமை மற்றும் கூட்டுறவின் வாயிலாக உலக அமைதியை நிலைநாட்ட வேண்டும் என்று கூறுகின்றது. இன்றையச் சூழலில் இவ வழிமுறைகள் எந்த அளவில் பயன்படும்?

விடை : ஒற்றுமையும் கூடி வாழ்தலும் மனித இனத்தின் இயற்கைக் குணங்கள்; ஆனுல் சூழல் மற்றும் நிலைமையின் வேறு

ஆசாரியஸ்ரீ துளசி அடிகளார்

தமிழில் : டாக்டர் எஸ். நாராயணஸ்வாமி

பாடுகளினுல் இது மறக்கப்பட்டுவிடுகிறது. இவ்வாறு மறப்பது இயற்கைக்கு மாறுபட்டது அன்று. சூழலும் நிலைமையும் இயற்கை குணங்களையும் மறைத்துவிடுகின்றன. மனிதன் சமுதாய. அரசியல் பொருளாதார சூழலில் வாழ்கின்றுன்; அவற்றை அடுத்து நிகழ் கின்ற குணங்கள் இயற்கைக் குணங்களை முற்றிலும் அழித்து விடுகின்றன. எந்தச் சூழலில் வாழ்ந்தாலும் மனிதர்கட்கு ஒற்றுமையும் கூடி வாழ்தலும் தனியே உரிய குணங்கள். இன்றையச் சூழலில் காலத்தின் ஒவ்வொரு நிலையிலும் இதனை நினைவூட்டுதல் அறம் அல்லது ஆன்மீகத்தின் பணியே. இவ்வாறு நினைவூட்டுவது ஒவ்வொரு காலத்திலும்—அமைதிக் காலமானுலும் போர்க்காலமானுலும் சரி—பயன்படுவதே. போர்ச் சூழல்களில் அது மிகவும் அதிகம் வேண்டப்படுவதே. அணுவிரதம் தனது பொறுப்பை உணர்ந்து விழிப்புடன் செயல்படுகின்றது. அது மனித ஒற்றுமை மற்றும் கூடி வாழ்தலை நினைவூட்டும் பணியில் ஈடுபட்டுள்ளது. ஏனெனில் இவற்றை மறப்பது உலக அமைதிக்கு அதிக ஊறு விளைவிப்பதாகும்.

வினு : மனித ஒற்றுமையும் கூடி வாழ்வதும் இயற்கையாயின் மனிதர் போராட்டத்தில் ஏன் ஈடுபடுகின்ருர்? இயற் கைக குணங்களை மறந்ததுதான் போராட்டத்தின் முக்கிய காரணமா? அன்றி இதன் பின்னணியில் தவறு வலுவான காரணங்கள் உள்ளனவா?

விடை : மனிதர் வாழ்வதற்கு அல்லது வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக்கொள்வதற்குப் பொருள் சேர்க்கிருர். பொருட் சேர்க்கை உள்ள இடத்தில் வேறுபாடு தோன்றும். வேறுபாடு உள்ள இடத்தில் போராட்டம் நிகழும். மிகுபொருள் சேர்த்தல் மனிதரது ஒற்றுமையைக் குலைக்கின்றது. கூடி வாழ்தலினும் விரிசல்களை ஏற்படுத்துகின்றது. போராட்டம் மிகுபொருள் சேர்த்தலின் தவிர்க்க முடியாத விளைவு ஆகும். மிகுபொருள் சேர்க்கும் ஆவல் உள்ள இடத்தில் போராட்டம் நிகழாமல் எங்குமே இருக்க முடியாது.

நமி என்னும் அரசன் கடுஞ் சுரத்தினுல் பீடிக்கப்பட்டான். அந்நாட்டின் மிகச் சிறந்த வைத்தியர்கள் வைத்தியம் செய்தும்

அரசனின் சுரம் குறையவில்லை; எரிக்கும் சுரத்தில் வல்லமையைக் குறைப்பதற்கு சந்தனத்தைப் பூசவேண்டும் என்று ஆலோசனை கூறினர். ராணிகள் சந்தனம் அரைக்கத் தொடங்கினர். அவர்கள் கைகளில் அணிந்திருந்த வளையல்கள் கலகலவென்னும் ஒலியை எழுப்பின; வளையோசை அரசனுக்குப் பொறுக்க முடியாததாகி விட்டது. அரசிகட்கு அரசரின் இந்நிலை பற்றிய செய்தி எட்டியது. அவர்கள் தங்களது கைகளில் கைக்கு ஒன்று மட்டும் வைத்துக் கொண்டு மற்ற வளையல்களைக் கழற்றிவிட்டனர். வளையல்களின் 'கல கல' ஓசை அடங்கிவிட்டது. அரசர், சந்தனம் அரைப்பதை நிறுத்திவிட்டார்களா?' என்று வினவினர். வைத்தியர்கள், ''அரசரே! சந்தனம் இப்பொழுது கூட அரைக்கப்பட்டு வருகின்றது'' என்றனர். ''வளையோசை என்னவாயிற்று?'' என்று அரசர் கேட்டார். அரசரின் இவ்வினாவிற்கு விடையளித்து மருத்துவர்கள், ''அரசரே! உங்களது அமைதியைக் குலைத்த வளையல்களை அரசிகள் கழற்றிவிட்டனர். இப்பொழுது அவர்களில் கைக்கு ஒரு வளையல்தான் வீதம் உள்ளன'' என்றனர்.

அரசரது சிந்தனையில் புதியதொரு உண்மை புலப்பட்டது. ஒருமை, பன்மை இவற்றின் விளைவு வரை அரசர் சிந்தித்தார். அரசர், ''மிகுபொருள் சேர்ப்பதின் விளைவு போராட்டமாகும்; சேர்க்கை இல்லாத இடத்தில் போராட்டம் நிகழ்வதில்லை'' என்று எண்ணினர். அரசரின் மனம் அமைதி அடைந்தது, ஒருமையைப் பற்றிய உயர் கருத்துக்கள் உடலை எரிக்கும் சுரத்தை அழித்து விட்டன. உடல் குணம் அடைந்ததன் விளைவாக உள்ளமும் குணமடைந்தது; உள்ளப் பிரச்னைக்கும் தீர்வு கிட்டியது.

வினா : பொருள் சேர்த்தல் உள்ள இடத்தில் போராட்டம் இருக்கும் என்ற கருத்துப் புரிகின்றது; ஆயின் சேர்ப்பது வாழ்க்கைக்கு இன்றியமையாதது; இந்நிலையில் போராட்டத்தினின்றும் எவ்வாறு தப்புவது?

விடை : 'இன்றியமையாமை' என்பது வாழ்க்கையின் தொடர் ஓட்டம். ஓட்டம் 'சேர்த்தல்' ஆகாது. அவ்வோட்டத்தைத் தடைப்படுத்தி ஒன்று சேர்த்து வைப்பதே 'சேர்த்தல்'. உலகியல்

பொருட்களைச் சேர்க்க வேண்டும் என்ற எண்ணம் தோன்றிய உடனேயே மனப்போராட்ட நிலை தோன்றிவிடுகின்றது. நிகழ் காலத்தில் வாழ்கின்ற கலையை அறிந்துகொண்டிருப்பவர் மட்டுமே இப்போராட்டத்தை விலக்க முடியும்.

சிந்தனைச் சூழலில் சிக்கியுள்ள செல்வந்தர் ஒருவர் கம்பீர மான முகத்துடன் தன் வீட்டில் நுழைந்தார். இதற்கு முன்னரே பலதடவைகள் அவர் மனைவி அவரை வீட்டிற்கு அழைக்க முயன்றாள். ஆயின் அவர் தனது பணியில் தொடர்ந்து ஈடுபட்டு இருந்தார். மனைவி அவர் தாமதமாக வந்ததன் காரணத்தைக் கேட்டாள். அதற்கு அவர், ''இன்று நான் நமது ஏழு தலைமுறை கள் சிறப்பாக வாழ்வதற்கான ஏற்பாடுகளைச் செய்துவிட்டு வந்தேன். எனவே நீ கூப்பிட்ட நேரத்தில் வர முடியவில்லை'' என்றார். அவரது மனைவி பகுத்தறிவுடையவள்; ஏழு தலைமுறைகள் பற்றிய கவலை பெரும் அறியாமை என்றே அவளுக்குத் தோன் றியது. சிறிது நேரங்கழித்து அவள் கணவரிடம், ''நமது வீட்டுக்கு வெளியில் ஒரு குடிசையில் சந்நியாசி ஒருவர் இருக் கின்றார். தாங்கள் அவருக்கு உணவு அளித்துவிட்டு வாருங்கள்'' என்றாள். கணவர் சாக்குப் போக்குச் சொல்லிப் பார்த்தார். ஆனால் மனைவியின் பிடிவாதத்தை அவரால் மீற முடியவில்லை.

ஒரு பாத்திரத்தில் சில ரொட்டிகளை எடுத்துக்கொண்டு அவர் சந்நியாசியிடம் சென்றார்; ரொட்டிகளை அவரிடம் நீட்டினார். சாது கவலையற்ற முகத்துடன் அமர்ந்து இருந்தார். ''நான் உணவு அருந்தியாகிவிட்டது'' என்றார் அவர்.

செல்வந்தர் அதற்கு, ''மாலை உணவுக்கு இந்த ரொட்டிகளை வைத்துக்கொள்ளுங்கள்'' என்றார். உடனே சாது புன்சிரிப்புடன் ''மாலை உணவைப்பற்றி இப்பொழுது ஏன் கவலைப்படவேண்டும்'' என்றார். சாதுவின் ஒரு வாக்கியம் செல்வந்தரின் சிந்தனையை திசை திருப்பியது. அவர், ''மாலை உணவைப்பற்றிக்கூடக் கவலைப்படாத விசித்திர மனிதர் எங்கே! ஏழு தலைமுறைகளைப் பற்றி கவலைப்படும் நான் எங்கே,'' என்று எண்ணினார். அவர் தனக்குத்தானே சிரித்துக்கொண்டார்.

எதிர்காலத்திற்கென்று கவலைப்படும் மனிதர்கள் பொருள் சேர்க்கிறார். நிகழ்காலத்தில் வாழ்பவர், சேர்ப்பதைப் பற்றி கனவு கூடக் காணமாட்டார். இவ்வாறான மனிதர் விடுதலையான வாழ்வு வாழ்கின்றார். விடுதலை வாழ்வின் வரையறை—கடந்த காலச் சிந்தனையினின்றும் விடுபட்ட, எதிர்காலப் பேராசைகளி னின்றும் விடுபட்ட நிகழ்காலத்தை பற்றற்று பயன்படுத்தி வாழும் வாழ்க்கை என்பதாகும்.

மிகுபொருள் சேர்த்தல் மனித ஒற்றுமை, கூடி வாழும் உணர்வு இவற்றின் மேலிட்ட முதல் மறைப்பு. இம் மறைப்பைக் களாற்றாமல் போராட்டத்தினின்றும் தப்புவது இயலாததாகும்.

வினா: பாகிஸ்தான், பங்களா தேஷ் இவற்றிடையே தோன்றிய போராட்ட தலையின் காரணமும் மிகுபொருள் சேர்த்தல் தானா?

விடை: இல்லாவிடில் வேறு என்ன? பங்களா தேசத்து மக்கள் விடுதலைபெற விரும்பினர். பாகிஸ்தான் அவர்களைத் தன்னுடன் சேர்த்து வைத்துக் கொள்ள விரும்பியது. 'சேர்த்தல்' என்பது செல்வத்திற்கு மட்டுமின்றி, அதிகாரம், மக்கள் மற்றும் நிலத்திற்கும்கூட உண்டு. அதிகாரம் சேர்த்தல், மக்களைச் சேர்த்தல், பூமியைச் சேர்த்தல் போன்ற வலுவான ஆசைகள் தான் போர் வெறிக்கு முக்கிய காரணமாகும்.

வினா: பங்களாதேசம் மற்றும் பாகிஸ்தானுக்கிடையிலான போராட்டத்தில் பாரதம் ஏன் குதிக்க நேரிட்டது?

விடை: பாரதப் பண்பாடு போருக்குச் சாதகமானது அன்று. அஹிம்சைதான் பாரதப் பண்பாட்டின் கொள்கை. போரை அது வேறு வழியற்ற நிலை என்று கருதுகிறது. பாகிஸ்தகனின் இப் போராட்டத்துடன் பாரதம் முயற்சி ஏதுமின்றியே சேர நேரிட்டது. இதற்கும் 'சேர்த்தல்' தான் காரணமாயிற்று.

பாரதத்திட்டம் கிட்டதட்ட ஒரு கோடி அகதிகள் தனியாக வந்து சேர்ந்து விட்டனர். அவர்களைத் தன் நாட்டில் இணைத்துக் கொள்ள முடியவில்லை; அதிகப்படியான இச்சேர்க்கையை அகற்றுவதற்கான பாரதம் போர்க்களம் செல்ல நேரிட்டது. நாமே சேர்த்தாலும், தானாக வந்து சேர்ந்தாலும் அதன் விளைவு ஒன்றாகத்தான் நிகழ்கின்றது.

வினா : போருக்கு நிலைத்த தீர்வு எதுவென்று நீங்கள் கருதுகின்றீர்கள்?

விடை : போர் இரண்டு புறங்களில் நிகழ்கின்றது; ஒரு புறத்தினர் தற்காப்பிற்கென்று போரிடுபவராகவும் உள்ளனர். மனித ஒற்றுமையின் சிதைவு விடுதலையை அழித்தல், அதிகாரம், பொருள் மற்றும் நாட்டைத் தன்வசப்படுத்திக் கொள்ளுதல், இதுபோன்ற பல்வேறு காரணங்களினால் போர்ச் சூழல் தோன்று கின்றது. குறிக்கோள்களுக்காகவும் போர் நிகழ்வது உண்டு. இந்தியா–பாகிஸ்தான் போராட்டத்தின் பொழுது திருமதி இந்திரா காந்தி அவர்கள், ''நாங்கள் சண்டையிட விரும்பவில்லை; நமது கொள்கைகள் மற்றும் குறிக்கோள்களைக் காப்பாற்ற விரும்புகின்றோம்; கொள்கைகளைக் காப்பதற்கு என்று வேறு வழியின்றி நாங்கள் சண்டையிட நேரிடுகின்றது'' என்று கூறினார். திருமதி இந்திரா காந்தி இவர்கள் தாம் கூறியதை நிரூபித்தும் காட்டி விட்டார். வலுக்கட்டாயம் அகன்றவுடனேயே போர் நிறுத்தம் அறிவிக்கப்பட்டு விட்டது. இவ்வறிவிப்பிற்கு பாகிஸ் தான் ஒப்புதல் அளித்தது; போர் முடிந்தது.

போரின் சமயத்திற்கேற்ற இத்தீர்விற்கு அதிகாரம், முதல் மற்றும் கூடிவாழும் கொள்கை மலர்ந்து எந்த நாட்டின் சுதந்திரம் மற்றும் பிரிவில் தலையிடாமல் இருக்கும் பொழுது நிலைத்த வடிவம் கிட்டும். அணுவிரதக் கருத்து உலக அமைதிக்கு உருப்படியான பணியாகும். இதன் வாயிலாக அரசியல், பொருளாதாரம், மற்றும் சமூகவியலில் சீர்திருத்தம் நிகழ்த்த முடியும். அணு விரதத்தின் பலன்கள் பின்வருமாறு:—

# பகையும் பழியும்

கிணறு ஒன்றில் கங்காதத்தன் என்னும் தவளையரசன் இருந்தது. அந்த அரசனை அவனுடைய இனமாகிய ஏனைய தவளைகள் அவமானப்படுத்தின. அப்படி அவமானமடைந்த தவளை வேந்தன் நீர் இறைப்பதற்காக கட்டி வைத்திருந்த கயிறு ஒன்றன் வாயிலாகத் தொத்தி மேலே வந்தது. பின்பு தனக்குத் தானே அது எண்ணிக் கொள்வதாயிற்று: ''என்னை அவமானப் படுத்திய உற்றார் உறவினர்மீது நான் பழிக்குப் பழிவாங்க வேண்டும். தீமை செய்தவர்களிடம் பழிக்குப் பழி வாங்குபவனே மறுபிறப்பில் பெருநிலை எய்துகிறான் என்பது கோட்பாடு'' இப்படி அது எண்ணிக் கொண்டிருக்கையில் பிரியதர்சனன் என்னும் கருநாகம் ஒன்று தன் வளைக்குள்ளே நுழைவதைக் கண்டது. கண்டபின் அது எண்ணியதாவது; 'இந்த ஸர்ப்பத்தைக் கிணற்றுக் குள்ளே அழைத்துச் சென்று என் சுற்றத்தார்களனைவரையும் ஒழித்து தள்ளிவிடுவேன். எதிரியைக் கொண்டே எதிரியை ஒழித்து விடவேண்டும் என்பது கோட்பாடு. வல்லவன் ஒருவனை மற்றொரு வல்லவனைக் கொண்டு தகர்த்து விடவேண்டும். என்பதுவும் கோட்பாடு. இப்படிச் செய்கின்றவனே மேலும் துன்பத்துக்கு ஆளாகான். முள்ளைக்கொண்டு முள்ளைக் களைந் தெடுப்பது போன்று ஒவ்வாதவனைக் கொண்டு ஒவ்வாதவனை ஒழித்து விடவேண்டும்.'

அங்ஙனம் தீர்மானம் செய்து கொண்டு அத்தவளை பாம்பின் புற்றண்டை சென்று 'பிரியதர்சனா வெளியே வா' என்று கூப்பிட்டது. இதைச் செவியுற்ற ஸர்ப்பம் 'இது என் இனத்தார் பேச்சன்று. வேறு ஏதோ இனத்தாருடைய மொழி காதில் படுகிறது. ஆனால் இவ்வுலகில் ஸர்ப்பம்தான் ஸர்ப்பத்தோடு இணக்கம் கொள்ளுகிறது. ஆகையால் வளைக்குள்ளிருந்து கொண்டே வந்திருப்பவன் யார் என்று பார்க்கிறேன்—வேற்றான் ஒருவருடைய இனம், குணம், இருப்பிடம், வலிவு ஆகியவற்றை அறிந்து கொள்ளாது அவனோடு இணக்கம் கொள்ளலாகாது என்பது கோட்பாடு. வந்திருப்பவன் ஒருவேளை பாம்பாட்டி

யாக விருக்கலாம். அல்லது விஷ வைத்தியனுக விருக்கலாம். அல்லது பிறர் உணவில் விஷம் கலந்து அவர்களைக் கொல்ல எத்தனிக்கும் விரோதியாக இருக்கலாம்—இப்படியெல்லாம் எண்ணிக் கொண்டு வந்திருப்பவன் யாவன்? என்று கேட்டது. தவளை விடையளித்தது, ''நான் கங்காதத்தன் தவளைகளுக்கு வேந்தன். உன்னேடு உறவு கொண்டாட விரும்புகிறேன்'' இதைக்கேட்ட ஸர்ப்பம் ''இது நம்ப முடியாத விஷயம். புல்லுக்கும் தீயிக்குமிடையில் நட்பு பார்ப்பது சாத்தியமா? கொன்று தின்பவனிடம் கொல்லப்படுபவன் கனவிலும் போக மாட்டானே அப்படியிருக்க நமக்கிடையில் நட்பைப் பற்றி இனி பிதற்றுவானேன்?''

கங்காதத்தன், நீ சொல்வது உண்மை. நீ எங்களுடைய பகைவன் என்பது வெளிப்படை. ஆயினும் என் விரோதிகளினுல் தோற்கடிக்கப்பட்டும் அவமானப்படுத்தப்பட்டும் இருக்கிறேன். ஆதலால் உன்னிடம் வந்திருக்கிறேன்: உயிருக்கும் பொருளுக்கும் ஆபத்து வரும்போது காப்பாற்றப்படும் பொருட்டு எதிரியையும் கூப்பிடலாம் என்பது கோட்பாடு.''

பாம்பு : 'உன் எதிரிகள் யார்?'

தவளை : 'என் சுற்றத்தாரே'

பாம்பு : 'நீ எங்கே வசிக்கிருய்?'

தவளை : 'சுற்றிலும் கல் சுவர் எடுக்கப்பட்டக் கிணறு ஒன்றில்.'

பாம்பு : 'எனக்கு கால் இல்லை. வயிற்றுல் ஊர்ந்து போகிறேன். ஆகையினுல் அக்கிணற்றுக்குள் வர எனக்கு இயலாது. எப்படியாவது வந்து சேர்ந்தாலும் வசிப்பதற்கு எனக்கு அதில் வளை இல்லை. பின்பு உன் சுற்றத்தாரைக் கொல்வது எப்படி' ஆகையினுல் ஓடிப்போ.'

கங்காதத்தன் : அதைப்பற்றிக் கவலைப்படாதே. கிணற்றுள் செல்வ சுலபமான வழியொன்றை நான் காட்டு

கிறேன்: கிணற்று நீர் மட்டத்தில் அழகிய வளை யொன்று உளது. அவ்வளையில் வசித்துக் கொண்டு நீ சுலபமாக என் சுற்றத்தாரைக் கொல்லலாம்?''

இதைக் கேட்ட பாம்பு எண்ணியதாவது, 'எனக்கு இப்போது வயது வந்துவிட்டது. ஏதோ சில வேளைகளில் சுண்டெலி பிடிக்கிறேன். தன் குடும்பத்துக்கே பகைவனான இந்த தவளை எனக்குச் சுகஜீவனத்துக்கு வழிகாட்டி தருகிறது. ஆதலால் அதனோடு சென்று நான் தவளைகளைத் தின்பேன். விருந்தாப்பிய தசையில் வேண்டிய வசதிகளைத் தேடி வைத்துக் கொள்ளவேண்டும் என்பது கோட்பாடு.' இப்படி எண்ணிய பாம்பு தவளையிடம், ''அப்படியானால் கங்காதாத்தா, நீ முன்னே செல், நான் உன் பின்னே வருகிறேன்'' என்றது.

கங்காதத்தன்: பிரியதரிசனா! கிணற்றுக்குப் போக சுலபமான வழியை நான் காட்டுகிறேன். வசிப்பதற்கு வசதியான இடத்தையும் நான் காட்டுகிறேன். பின்பு நிபந்தனையொன்றையும் நான் நியமிக்கிறேன். நான் காட்டித் தருகின்ற தவளைகளை மட்டும் நீ தின்னவேண்டும்.''

பாம்பு: இப்பொழுது நீ என் நண்பனாகி விட்டபடியால் உன் சொற்படி நான் செய்கிறேன்.

பாம்பு வளையினின்றும் வெளியே வந்தது. தவளையோடு கிணற்றுக்குச் சென்றது. நீர் இறைக்கும் ஏற்றத்தின் வழியாகப் பாம்பை கிணற்றினுள் அழைத்துச் சென்றது. வசதியான வளையில் அது வசித்திருக்க ஏற்பாடு செய்தது. தின்னவேண்டிய தவளைகளை ஒன்றன் பின் ஒன்றாகக் காட்டிக் கொடுத்தது. பாம்பும் அவைகளை உண்டு நன்றாக வாழ்ந்தது. எதிரிகளெல்லாம் ஒழிந்து போயின. அப்பொழுது பாம்பு, ''கங்காதாத்தா, இனி நான் உண்பதற்கு உன் பகைவன் யாருமில்லை. நீ என்னை இங்கே அழைத்து வந்திருக்கிறாய் ஆகையால் அன்பு வைத்து நீ எனக்கு உண்ண உணவு தா என்று கேட்டது.

அதற்கு தவளை, ''நண்பா, நீ எனக்கு உபகாரம் ஒன்று செய்துள்ளாய். என்பகைவர்களை நீ ஒழித்துத் தள்ளிவிட்டாய்: ஆகையால் இனி நீ ஏற்றத்தின் வாயிலாக ஊர்ந்து மேலே சென்று உன் இருப்பிடத்திற்குப் போய்விடு'' என்றது.

அதற்கு பாம்பு, ஒ. ''கங்காதத்தா! நீ இப்படிச் சொல்வது சரியன்று. பழைய வளைக்கு நான் எப்படி போகக்கூடும்? வேறு ஏதாவது பாம்பு அவ்வளையில் குடி புகுந்திருக்கும். ஆகையால் நான் இங்கேயே வசித்திருப்பேன். நாளொன்றுக்கு ஒரு தவளை வீதம் உன் குடும்பத்திலிருந்தே எனக்கு உணவு தா. இல்லையென்றால் உன் குடும்பம் முழுவதையும் நான் இப்பொழுதே அழித்து விடுவேன்'' என்று கூறியது.

''கங்காதத்தனுக்கு விசனம் வந்து விட்டது. அது தனக்குள், இந்தப் பாம்பை நான் இங்கே அழைத்து வந்தது பிசகு. அதன் சொற்படி செய்யா விட்டால் என் குடும்பம் முழுவதும் அழிந்து போம். வலிய சத்துருவை சிநேகம் பண்ணுகிறவன் விஷத்தை குடிப்பவனாகிறான் என்று சொல்லுகிறார்கள். அக்கொடுமைக்கு நான் இப்பொழுது ஆளாகியிருக்கிறேன். நாள் ஒன்றுக்கு தவளையொன்றை என் குடும்பத்தினின்று இப் பாம்புக்குத் தருகிறேன்'' என்று எண்ணியது.

இந்த சூழ்நிலையில் கங்காதத்தனை தவிர ஏனைய தவளைகளெல்லாம் மடிந்து போயின. அப்போது பிரிறதர்சனன் தவளையைப் பார்த்து, ''ஓ கங்காதத்தா, பசியைப் பொறுக்க என்னால் இயலவில்லை; ஆகையினால் எனக்கு ஏதாவது உணவு தா.''

தவளை அதற்கு, ''ஓ நண்பா, நான் உயிரோடு இருக்கும் வரையில் உனக்கு கவலையொன்றும் வேண்டாம். எனக்கு நீ அனுமதி தா வேறு குளத்துக்கோ, குட்டைக்கோ சென்று அங்குள்ள தவளைகளையெல்லாம் இங்கே குடியேற நான் அழைத்து வருகிறேன். இங்கு உனக்கு வேண்டிய அளவு உணவு கிடைக்கும்.

அதற்கு பாம்பு, நீ என் சகோதரன் போன்றவன். ஆகையால் நான் உன்னை விழுங்கிவிடலாகாது. நீ சொல்கிறபடி செய்வா

யாகில் நீ எனக்குத் தந்தையாவாய். ஆதலால் உன் கருத்தை நிறைவேற்று'' என்று சொன்னது.

நீர் ஏற்ற மரத்தின் வாயிலாகத் தவளைமேலே கிளம்பிச் சென்றது! தான் பத்திரமாக வேறு இடம் போய் சேர வேண்டு மென்று பல தெய்வங்களிடம் அது பிரார்த்தனை பண்ணிற்று. ஆபத்து ஏதுமின்றி மற்றொரு கிணற்றை அது சென்றடைந்து அங்கிருந்த தவளைகளோடு சேர்ந்து கொண்டது.

பிரியதர்சன் கங்காதத்தனுடைய வரவை எதிர்பார்த்துப் பல நாள் காத்திருந்தது. தவளையோ வந்தபாடில்லை. ஆதலால் அது இக்கிணற்றில் மற்றோர் வளையில் வசித்திருந்த ஓணனிடம் இயம்பியதாவது. 'ஓ நண்பா எனக்கு ஓர் உபகாரம் செய். நான் உன்னுடைய பழைய நண்பன் அல்லவா. ஆதலால் கங்காதத்த னிடம் என்னுடைய செய்தியை எடுத்துச் சொல். அதாவது; வேறு தவளைகள் அகப்படாவிட்டால் தனியாகவாவது நீ வந்து சேர். உன்னைப் பிரிந்து நான் வாழ்ந்திருக்க முடியாது. உனக்கு ஒரு தீங்கும் செய்யமாட்டேனென்று நான் உறுதி கூறுகிறேன். நான் உனக்கு ஏதேனும் தீங்கு செய்தால் நான் சம்பாதித்துள்ள புண்ணியங்களெல்லாம் உனக்கே உரியனவாகுக!'

ஓணன் கங்காதத்தனைக் கண்டு பிடித்தது. அது விடுத்த செய்தியாவது; 'கங்காதத்தா, உன்னுடைய நண்பனாகிய பிரியதர்சனன் நீ திரும்பி வருவதை எதிர்பார்த்து ஆவலோடு காத்திருக்கிறது. ஆகையினால் விரைவில் திரும்பி போ, உனக்கு தீங்கொன்றும் செய்வதில்லை என்றும், தவறுதலாக உனக்கு ஏதாகிலும் தீங்கு செய்து விட்டால் அதனுடைய புண்ணியங் களெல்லாம் உனக்கு உரியனவாகுகவென்றும் அது சொல்லி யனுப்பியிருக்கிறது.

இதைக் கேட்ட கங்காதத்தன் கூறியதாவது; 'பசியால் வாடு பவன் எந்தப் பாவத்தையும் துணிந்து செய்வான். தளர்வுற் றிருக்கும் ஒருவன் யாருக்கும் இரக்கம் காட்டமாட்டான். கங்காதத்தன் மீண்டும் அக்கிணற்றுக்குத் திரும்பி வரமாட்டா னென்று நண்பா: பிரியதர்சனிடம் செய்தி சொல்வாயாக. இங்ஙனம் இயம்விட்டு அத்தவளை புதிய கிணற்று நீரில் நீந்தி விளையாடி இனிது வாழ்ந்திருந்தது.

# துளசியடிகளார் பிள்ளைத்தமிழ்

—புலவர் வை. பழநி

## நேமிநாதர்

இதிகாச காலத்தில் ஐவரின் இல்லாளாய்
பாஞ்சாலி வாழ்ந்த பொழுதில்

மதிவிழ சூதாடி மாமன்னன் குந்திமைந்தன்
மண்மனை யாளும் இழந்தான்

அதிகார மென்னும் கொடிகட்டி வாழ்ந்திட
அந்நாள் அரவக் கொடியோன்

சதிவாழ் சகுனியின் சொல்கேட்டு பஞ்சவர்க்கு
ஐகுடில் ஈய மறுத்தான்

சதிவீழ்ந்த தர்மம் தலைசாய்ந்த காலத்து
ஜைனராம் நேமி தேவா!

நிதியென மும்மணி தன்னையும் மண்ணில்
நெறிபட ஆக்கி வளர்த்திர்;

விதிவழி பாவங்கள் செய்வோரை மாற்றி
இறைமுறை சேர்க்க உலகில்

பசுவினின் பாசத்தை நீக்கிடச் செய்வோரை
காப்பிரே நாளும் புவியில்

## மகாவீரர்

கலைபயில் அரச குடும்பத் துதித்தோய்
பலப்பல காலத்துப் பாவ வினைகள்

நிலையாது நீங்க அனுநான் கவரிலே
அந்தமாம் மாவீர தீர்த்தங்க தேவா!

நிலையிலா வாழ்வை நிலையென எண்ணி
உலையிடைக் காயும் இரும்பென வாழ்ந்து,

அலையென மீண்டும் அவனியில் தோன்றும்;
நிலையினை போக்க உலகுக்கு வந்தீர்

மலையெனும் தீவினை நீங்கிடப் பாரில்
மயக்கொழி ஆன்மத் துறவால் இயலும்

மலமறு வாழ்வுமே எய்தலா மென்றே
சிறுசிறு நோன்புகள் ஏற்றிடத் தந்தார்

சிலைவழி பாட்டில் திளைத்திடு மாந்தர்
சலனச் சடங்கினால் சாவினைச் சார்வார்

ஜலம்சூழ் புவியில் சகலரும் உயர
அருளுரை நல்கும் துளசியார் காப்பீர்.

## தீர்த்தங்கரர்கள்

கிகத்தி லுதித்த இருபத்து நான்கு
இருடிகள் தந்தார் சமணமாம் தத்துவம்

செகந்தினில் தர்மமும் சாயும் பொழுதினில்
ஜைனத் துறவோர் தழைத்திடச் செய்தார்

சுகங்களை நீக்கி அவரவர் துன்பம்
சுவைந்ததால் தீவினை வென்றே உயர்ந்தீர்

அகத்தின் மளங்களை நீக்கிநல் வழியினில்
ஆன்மா இறைநிலை பெற்றிட உய்ந்தீர்

பகவான் உயர்நந்தி நாதரின் ஆதியோ
டந்தமாம் பசிபலி நீக்கு

புகழுடை சுத்தோ தனரே! மனிதரின்
பாவ வினையற் றிறையாய் உயரப்

பகலவன் போலே திகழ்ந்தீர் நிலத்தில்
பகைவரும் பணிந்து வணங்கிடும் சாது

மகத்தினில் சனியாம் வினைகளை வெல்வார்
துளசியாம் சேயினை யாவரும் காக்க

## ஜிங்கர்

'கடவுளே! உன்வழி' என்றுமே
கட்டுப்பாட் டுடனே வாழ்ந்தவா!
நடைமுறை மாற்றங்கள் வேண்டியே
பதிமூன் றறவோர் கூடினீர்

உடமைகள் சேர்ப்பதை நீக்கியே
உண்மைத் துறவியால் வாழ்ந்தவா!
மடமைகள் நீக்கிடும் கொள்கைகள்
மண்ணினில் பரவிடச் செய்தவா!

இடர்படு துன்பங்கள் தாங்கிடும்
எண்ணறு துறவியர் கூடியே,
துயர்படு பாவங்கள் நீங்கிட,
சங்கமமும் தந்தால் பிக்குவே!

உடலுடை வினைகளால் ஆன்மா
உலகினில் பிறந்திடச் செய்வதை,
தடைசெய் சிறுசிறு நோன்புகள்
தந்தவர் தன்னையும் காப்பீரே

## டால் சந்தி

டால்கனி என்றால் மறவன்கை
சேடயம் என்றறிந திட்டோம்
டார்வினின் கொள்கை யனைத்தும்
சரியென கொள்ளி றெனஉரைத்தீர்

பாலெனும் நல்லார் பெயர்சொல
பாம்பின் விடமது தீர்ந்ததே
பாவத்துட் பட்ட குலாப்கான்
பதமலர் பற்றினார் கேட்டோம்

ஆலெனச் சங்கம் வளர்ந்திடத்
தூய்மை வலிவாம் துலங்கும்
விதிகள் தேயின் விடமென
மாறிடும் என்றுமே கண்ட அம்

மாலவன் ஒத்த துளசி
அவனியின் தர்மம் காக்கவே;
மாதவர் சான்றோனே! நல்ஆசிர்
வாதம் அருளியே காப்பீர்.

---

# அற்பர்க்கு வாழ்வானுல் நல்லவர்கள் தளருவதேன்?

— கவிஞர் வேதம் —

---

காற்றினிலே அசுத்தங்கள் பரவினுலும்
கடும்விரைவில் கரைந்துவிடும்; எண்ணிக்கையில்
தோற்றுவிடும் ரோசாக்கள் முட்களுக்கே!
துன்பத்தைக் கொடுக்கும் அந்த முட்களால்தான்
விற்றிருக்கும் ரோசாவின் மதிப்பும் கூடும்!
வெறுத்தொதுக்கி அம்முள்ளே, மலரதனையே
போற்றித்தம் கூந்தலிலே வைப்பார் அன்றே?
பொய்யரிங்கு மிகுந்தாலும் கவலே தான் ஏன்?

ஆற்றில்நீர் பெருக்கெடுத்தே ஓடினாலும்
அள்ளித்தான் குடித்திடுமோ நாய்தான்? உண்மை!
நாற்றமனைய உள்ளம்தான் கொடியருக்கே!
நல்திண்மை, பக்குவம்தான் அங்கே ஏது?
சோற்றினாலே பிடித்து வைத்த பிண்டங் கண்டு
துவளுவதேன் நல்லாரே? அடக்க மாகக்
காற்றினிலே 'ஈதர்' — என்றும் இருப்ப தால்தான்
கன்னல்ஒலி கேட்கின்றோம் பெட்டி மூலம்!

மனசாட்சி அடகுவைத்துத் தீச்செயல்கள்
மற்றவர்க்குச் செய்தால்தான் பணமாய்ச் சேரும்
எனநினைத்தால், நல்லாரே! அந்தச் செல்வம்
எப்போதும் உமக்கிங்கே இழிவே சேர்க்கும்!
மனிதகுணம் பணத்தாலே வருவதில்லை!
மாப்புகழும் பணத்தாலே சேர்வதில்லை!
இனித்திருக்கும் சுழிவுநீர்தான் கிருமி கட்கே!
எடுத்துநீர்தான் பூசிவிட்டால் நாசம் சேரும்!

ஆதலினால் சிந்தித்தே வாழ்வில் நல்ல
அமைதி தரும் குணங்களையே கைப்பி டிப்பீர்
சாதல்வரை அரியசெயல் செய்த தால்தான்
சாக்ரடீஸும் புகழ்பெற்றான்! நேர்மைப் போக்கே
வேதனையில் மனத்தினையே விட்டி டாது!
வெறும்பணம்வந்(து) அமைதிதனைக் கொட்டிடாது
சோதனையில் வெற்றிகொள்க! துவள வேண்டாம்!
தூய்மைக்கு நற்பரிசை இறைவன் ஈவான்!

# ஞானம்

கொடுமுடி கவிஞர் க. அ. பிரகாசம்

ஆய்ந்தாய்ந்து பார்க்குங் காலை
அகிலத்து வாழ்க்கை தன்னில்
வாய்ந்திடும் பெருமை என்ன...
வருவதும் போவ தும்தான்
ஓய்வின்றி நடக்கக் காண்போம்
ஒருபெரும் நன்மை யில்லை
தேய்வதும் மாய்வ தும்தான்
தெளிந்திட்ட உண்மை யாகும்!

ஒருசில நாட்கள் யாக்கை
ஓம்பிடும் வாழ்க்கைக் குள்ளே
வருகின்ற தொல்லை தோல்வி
கணக்கில்லை என்று சொல்வோம்
இருப்பினும் இந்த வாழ்வை
இணையற்ற வாழ்வாய் எண்ணி
தருக்கிக்கொள் கின்ற தென்னே
தனிப்பெரும் மடமை யாமே

கருவிலே உயிர்தான் ஒன்றிக்
கலந்திடும் முன்ன தாக
இருந்திட்ட உயிருக் கெந்த
இனத்தினைக் கண்டார்...? ஆனால்,

கருவாகி உருவாய் அன்னைக்
கருப்பையை விட்டு வந்த
தருணத்தில் அன்றோ பேதம்
சாற்றுதல் செய்கின் றார்கள்!

எத்தனை வேறு பாடு
ஏற்றத்தாழ் வென்ன என்ன
அத்தனை யுந்தான் அந்த
அன்னையின் சிசுவுக் கீந்து
வைத்தனர்! அடடா இந்த
வையத்து வாழ்க்கை ஏற்கும்
உத்தமன் பெற்ற பேறு
உரைத்திடில் இவைகள் தாமோ?

கடவுளின் குழந்தை யென்றே
காசினி யோரை யெல்லாம்
நடமுற எண்ணும் ஞானம்
திகழ்ந்திடப் பெறுவோர் யாரே!
கடவினை யொத்த உள்ளம்
கவினுறப் பெற்றிட் டோர்கள்
நடமாடுந் தெய்வ மாக
நவின்றிடப் படுவ ராமே!

அன்பேதான் சிவம்என் றிட்டார்
ஆன்றோர்அக் கொள்கை பூண்டார்
இன்னுயிர் அனைத்தும் இன்பம்
எய்துவாழ் வின்ற தற்கே

தன்னுயிர் தந்து கொண்டு
தரணியில் வாழ்ந்திட் டார்கள்
அன்னவர் பெற்ற ஞான
ஒளியினை வணங்கு வோமே!

காலையில் நலத்தி னோடு
காட்சிதந் திருந்திட் டோர்கள்
மாலையில் அவ்வண் ணம்மே
மகிழ்ந்திருப் பார்க ளென்று
சாலவே சொல்வ தற்குச்
சார்ந்திடும் உறுதி யேதே...
காலத்தின் கோலம் எந்தக்
கதியினை நல்கு மாமோ...

இருக்கின்ற போதே நன்மை
இழைத்திட வேண்டும்! நாளை
இருந்திடு வோமென் றேதான்
இறுமாப்புக் கொள்ள லாமோ...
வருவது வரட்டு மென்றே
வழுக்கிவீழ்ந் திடுதல் நன்றோ...
பெருமைகொள் அறத்தைச் செய்யப்
பின்வாங்கிச் செல்ல லாமோ.. 3

இயமம்நன் நியம மான
எண்வகைப் படிகள் ஏறும்
நயமிகு யோக வாழ்வில்
நலமுற மூலா தாரம்

வயங்கிடும் அனலை மேலாய்
வரச்செய்து சித்தா காயம்
உயர்த்தியே காணும் ஞான
ஒளியேதான் ஒளியாம் என்க!

ஞானமாம் ஒளிவந் திட்டால்
ஞாலமோர் கைக்குள் ளாகும்
வானமண் டலங்க ளெல்லாம்
வந்துமுன் நிற்கும்! நாவுள்
தேனமு தூறும்! காய
சித்தியுண் டாகும்! என்றும்
ஆனநற் செயல்க ளெல்லாம்
அதுவாக நடக்குந் தானே!

---

நமது தாய்க்கு அடுத்தபடியாக தாய்நாட்டைக் கருதுவது தான் நாட்டுப்பற்று; இப்பற்று வளர வளர நாடு முன்னேற்றம் அடையும். வெறும் கூச்சல்களினால் அன்றி முன்னேற்றச் செயல் களினால்தான் இதனை வளர்க்க முடியும். 'நான், எனது' என்னும் பற்றை விட்டுவிட வேண்டும், நாடு எனது என்னும் பற்றை வளர்க்க வேண்டும்.

* * *

வளமிக்க வாழ்வைப் போலவே வளமிக்க மனமும் கிடைத்தற் கரியது ஆகும். நீங்கள் படிப்பை முடித்துவிட்டபின் நல்ல நூல்களைப் படிப்பதற்கு நேரம் ஒதுக்குவீர்கள் என நம்புகிறேன். சிறந்த இலக்கியம் வாழ்க்கையை எவ்வளவு நிறைவுள்ளதாகவும், வளமிக்கதாயும் ஆக்குகின்றது என்பதைக் கண்டு நீங்கள் மேலும் வியப்பீர்கள்.

---

# உலக மகாகவி பாரதி

—நா. மகாலிங்கம்

மகாகவிகள் விரிந்த எண்ணப்பாங்கும், பரந்த நோக்கமும் உள்ளவர்கள், வருங்கால நிலைமைகளையும் நிகழ்ச்சிகளையும் துல்லியமாகக் கணித்துச் சொல்லும் ஆற்றல் உடையவர்கள்.

அவர்கள் காலத்தைக் கணித்துக்கூறும் வெறும் சோதிடர்கள் அல்லர். காலத்தை ஊடுருவிப் பார்க்கும் தீர்க்கதரிசிகள்.

உள்ளத்தில் உண்டாகும் உண்மை ஒளியில் எதிர்கால நிகழ்ச்சிகள் அவர்களுக்கு ஓவியக்காட்சிகளாக முன் வந்து நிற்கும். இந்த இயல்பை மகாகவி பாரதியின் உயிர்ப்பறவை அவர் உடற்கூட்டை விட்டுப் பறந்துவிட்டது.

ஆனால் அவர் தம் கற்பனைக் கண்ணில் இந்திய மண்ணின் விடுதலையைக் கண்டு எவ்வளவு நேர்த்தியாகப் பாடி இருக்கிறார்!

ஆங்கிலேயரிடம் இருந்து நாம் விடுதலை பெறுவதற்கு முன்பே தம் கவிதையில் நாட்டு விடுதலையைப் பிரகடனப்படுத்துகிறார்.

''ஆடுவோமே —பள்ளுப் பாடுவோமே!
ஆனந்த சுதந்திரம் அடைந்துவிட்டோம் என்று''

என்று சுதந்திரப் பள்ளு பாடுகிறார். ஆனந்தமாக ஆடிப்பாடி மகிழ்கிறார்.

''பறையருக்கும் இங்குதீயர்
புலையருக்கும் விடுதலை

பரவரோடு குறவருக்கும்
மறவருக்கும் விடுதலை''

இது, அவர் பாடிய பாரத சமுதாய மக்களின் விடுதலை கீதம்; இந்தியாவைப் பற்றிய அவரது எதிர்காலக் கனவு. இன்பக் கனவு.

சீனு நம் நாட்டின்மீது 1962ஆம் ஆண்டு படையெடுத்தது. ஆனல் இந்தியா சுதந்திரம் பெறுவதற்கு முன்பே சிரஞ்சீவித் தன்மை பெற்று விட்டவர் பாரதி. அவர் சீனக்காரர்களால் நமக்குக் கேடு வரும் என்பதை அறிவுறுத்துகிருர்.

''சீனப் பறையர்களேனும்—அவர்
எம்முடன் வாழ்ந்து இங்கு இருப்பவர் அன்ருே?
சீனத்தர் ஆய்விடுவாரோ?—பிற
தேசத்தர்போல் பலதீங்கு இழைப்பாரோ!''

என்று சுதந்திரம் பெற்ற இந்தியாவுக்கு, சீனநாட்டிலிருந்து வரும் அபாயத்தைப் பற்றி முன்கூட்டியே தீர்க்க தரிசனத்துடன் தலைவர்களுக்கு அறிவுறுத்துகிருர்,

''பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வம்
பாரினில் பெண்கள் நடத்த வந்தோம்''

என்று பாரதியின் புதுமைப் பெண்கள் முழக்கம் புரிகின்றனர்.

இன்று பெண்மணிகளின் அரசாட்சி உலகில் பல நாடுகளில் இடம் பெற்ற நிலையைக் காண்கிருேம். இஸ்ரேல் நாட்டில் திருமதி கோல்டா மேயரும், இலங்கையில் திருமதி சிரிமாவோ பண்டார நாயகாவும் பிரதம மந்திரிகளாக சமீப காலத்தில் ஆட்சி புரிந்தனர். புதிய வரலாற்றை உருவாக்கினர்.

இங்கிலாந்து நாட்டில் திருமதி தாட்சரும், இந்தியாவில் திருமதி இந்திரா காந்தியும் பிரதம மந்திரிகளாக உலகம் வியக்கஆட்சி புரிந்ததை நாம் கண்டோம்.

மகாகவி பாரதி பாடிச்சென்று அரை நூற்றுண்டுக்குப் பின் அவருடைய தீர்க்கதரிசனங்கள் நனவாகி வருகின்றன.

ஒரு மகாகவிக்கே உரிய தீர்க்க தரிசனத்தோடு எதிர்கால நிலையை அவர் கண்டு அறிந்து கூறி இருக்கிறார்.

நேற்று என்பது வரலாறு; இன்று என்பது வாழ்க்கை; நாளை என்பது வாழ்வின் விரிவைக் காட்டும் கனவு; தீர்க்கதரிசனம்.

பாரதியின் கனவுகள்; தீர்க்க தரிசனங்கள் நனவாகி வருவதற்குக் காரணம் என்ன? அவர் பாவலர்க்குப் பட்டப் பகலில் தோன்றும் நெட்டைக் கனவுகளில் மிதக்கவில்லை.

அந்தரத்தில் பந்தல் இட்டு, ஆகாயத்தில் கோட்டை கட்டி, கற்பனையில் காட்சிகளைக் கண்டு மகிழவில்லை.

அவர் கனவுகள்; தீர்க்கதரிசனங்கள் வரலாற்றில் வேர்பிடித்து அன்றைய வாழ்க்கை நிகழ்ச்சிகளில் உரம் பெற்றதனுலேயே நனவுகளாக மலர்கின்றன.

பாரதி நேற்றைய வரலாற்றைப் பார்த்தார். அவருக்குப் பெருமையும் பூரிப்பும் பொங்கின.

''எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவி
இருந்ததும் இந்நாடே—அதன்
முந்தையர் ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்து
முடிந்ததும் இந்நாடே—அவர்
சிந்தையில் ஆயிரம் எண்ணம் வளர்ந்து
சிறந்ததும் இந்நாடே—இதை
வந்தனை கூறி மனதில் இருத்தி என்
வாயுற வாழ்த்தேனே— இதை
வந்தே மாதரம், வந்தே மாதரம்
என்று வணங்கேனே?''

என்று நமது பாரத நாட்டின் பழம் பெருமையை உணர்ந்தார்.

அன்றைய இந்திய மக்களின் அவல வாழ்க்கையைப் பார்த்தார். நெஞ்சம் குமுறினர்; மனம் நொந்தார்; ஆத்திரம் கொண்டார்.

''நெஞ்சு பொறுக்கு திலையே— இந்த
நிலைகெட்ட மனிதரை நினைந்துவிட்டால்
அஞ்சி அஞ்சிச் சாவார்—இவர்
அஞ்சாத பொருளில்லை அவனியிலே''

என்று துடிதுடித்தார்; மனங் கொதித்தார்.

புண்ணிய பூமியாகிய பாரத நாட்டிலே, மக்கள் பொறியற்ற விலங்குகள் போல் வாழ்வது கண்டு இரக்கமும் கொண்டார்.

இந்திய 'மக்கள் வாழ்வில் விடிவெள்ளி தோன்றும் என்று உறுதியாக நம்பினர். அன்றைய தேச பக்தர்களின் நடவடிக்கைகள் அவருக்குப் பாரதநாடு நிச்சயம் சுதந்திரத்தை அடைந்தே திரும் என்னும் நம்பிக்கையைத் தந்தன.

வெந்தே மாயினும் வந்தே மாதரம் என்னும் மந்திரத்தை விடமாட்டோம் என்று குரல் கொடுத்த பாலகங்காதர திலகர், கப்பலோட்டிச் சிறையில் அடைபட்டுக் கல்லுடைத்த வ. உ. சி., இவர்களைப் போல வீட்டையும் வாசலையும் துறந்து நாட்டை விடுவிக்கத் தியாக வேள்வியில் குதித்த பெயர் தெரியா மறவர் பல்லோர் ஆகியோரின் நெஞ்சுறுதியும், தேசபக்தியும் அவரைப் பாரதத்தின் விடுதலையை முன்கூட்டியே பாட வைத்தன.

அண்டை நாடான சீனாவின் வரம்பு கடந்த மக்கட் பெருக்கமும், வாழ்க்கை நிலையும், நம் தலைவர்களின் மெத்தனப் போக்கும், சீனர்கள் நமக்கு என்றைக்காவது தீங்கு இழைப்பார்கள் என்று அவரை எண்ணச் செய்தன.

அன்றைக்குப் போராட்டக் களத்தில் குதித்துத் துணிவுடன் ஆங்கில அரசாங்கத்தை எதிர்த்த பெண்களின் வீரமும், உலகில் பெண்கள் படிப்படியாகப் பெற்று வந்த உயர்வும், எதிர்காலத்தில்

ஆணுக்குப் பெண் சரிநிகர்ச் சமானமாக அவர்கள் வாழ்வார்கள் என்று அவரை உறுதியாக எண்ண வைத்தன.

இத்தகைய அனுபவ சாத்தியமான தீர்க்க தரிசனத்துடன் வரலாற்றைக் கற்று, அன்றைய வாழ்க்கையைக் கூர்ந்து நோக்கி, எதிர்காலக் கனவுகளைப் படைத்ததனாலேயே அவை நனவுகளாகி பாரதியை மகாகவியாக்கின.

மகாகவி சுப்பிரமணிய பாரதியார் தமக்குப் பின்னே சில புதிய கருத்துகளை, சித்தாந்தத்தை நாட்டு மக்களுக்கும் இலக்கியத் திற்கும் வழங்கிச் சென்றிருக்கிறார்.

இளங்கோவடிகள் பத்தினி வழிபாடு என்னும் ஒரு புதிய வழி பாட்டை நாட்டு மக்களுக்கு உருவாக்கிக் கொடுத்துவிட்டுச் சென்றார்.

கம்பர், இராமன் வேடுவர் இனத்துக் குகனையும், வனநரர் களின் இனத்தைச் சேர்ந்த சுக்கிரீவனையும், மக்களை ரட்சிக்கும் நிலையிலிருந்து தடுமாறிய சக்கரவர்த்தியான ராட்சத ராவணின் தம்பியான வீடணனையும், தன் உடன் பிறந்தவர்களாகக் கொள்வதைக் காட்டி உலக சகோதர தத்துவம் என்னும் ஒப்பற்ற கொள்கையைப் பறைசாற்றி இருக்கிறார்.

திரு அருட்பிரகாச வள்ளல் பெருமான், ஜீவகாருண்யம் ஆன்மநேய ஒருமைப்பாட்டு உரிமை என்னும் வாழ்க்கை நெறிகளை வகுத்துக் கொடுத்திருக்கிறார்.

அதுபோல் மகாகவி பாரதியார் எதையேனும் நமக்கு வழங்கி இருக்கிறாரா? ஆம்; வழங்கி இருக்கிறார்.

பாரதிக்குப் பின் ''தேசியம்'' என்பது ஒரு சமயத்தின் தகுதியைப் பெற்றது.

பாரதியின் கவிமழை தந்த விளைச்சல்தான் 'பாரதீயம்'.

நாட்டைத் தாயாகவும் தந்தையாகவும் உருவகித்துப் பேசி வந்த மக்கள் இடையே அதைத் தெய்வம் என்று உயர்த்திக் கூறிய முதல் கவிஞர் மகாகவி சுப்பிரமணிய பாரதியார்.

''தேசமில்லாத இந்துஸ்தானம்—இதைத்
தெய்வம் என்று கும்பிடடி பாப்பா!''

என்று அவர் இந்தியாவைத் தெய்வமாகக் காட்டி இந்த நாட்டின் குழந்தைகளைக் கும்பிடச் சொல்கிறார் பாரதியார்.

சிவன், முருகன், கணபதி, நாரயணன் முதலிய திருநாமங்களைச் சொன்னால் தானம், குலம், கல்வி முதலிய எண்ணற்ற பேறுகள் கிடைக்குமென்று சமயச் சான்றோர்கள் பாடி வந்தனர்.

''குலந்தரும் செல்வம் தந்திடும்; அடியார்
படுதுயர் ஆயின எல்லாம்
நிலந்தரச் செய்யும்; நீள்விசும்பு அருளும்
அருளொடு பெருநிலம் அளிக்கும்;
வலம்தரும், மற்றும் தந்திடும்; பெற்ற
தாயினும் ஆயின செய்யும்;
நலம்தரும் சொல்லை நான் கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாமம்!''

என்று பக்திப் பரவசத்துடன் பாடுகிறார் திருமங்கை ஆழ்வார்.

இந்திய நாட்டைத் தெய்வமாக்கிய பாரதியோ இத்தகைய எல்லா நலன்களும் 'இந்தியா' என்னும் பெயரைச் சொன்னவுடனேயே கிடைக்கும் என்கிறார்.

''திறமிக்க நல்வயிரச் சீர்திகழும் மேனி
அறமிக்க சிந்தை; அறிவு—பிறநலன்கள்
எண்ணற்றன பெறுவார் 'இந்தியா' என்றநின்றன்
கண்ணொத்த பேர் உரைத்தக் கால்''

என்பது மகாகவி பாரதியின் அமுத வாக்கு. அவர் படைத்த

தேசியம் என்னும் புதிய சமயத்தினுல் கிடைக்கும் பெரும் பேறுகள்; பாரதியத்தின் நல்ல பயன்கள்.

இந்தத் தெய்வத்திற்கு அருச்சனை மொழிகளாகப் பாரத நாட்டின் பதினெட்டு மொழிகளையும் உபயோகிக்கச் சொல்கிறுர் மகாகவி பாரதியார்.

பாரத அன்னையை நோக்கி,

''விதமிறு நின்மொழி பதினெட்டும் கூறி
வேண்டியவாறு உனைப்பாடுதும் காணுய்''

என்று பாடி பரவிக் களிக்கிறுர்.

அன்று வரை தெய்வங்களுக்குப் பாடப்பட்டு வந்த திருப் பள்ளியெழுச்சி நவரத்தினமாலை, தசாங்கம், ஆகியவற்றைப் பாரததேவிக்குப் பாடுகிறுர் பாரதியார்.

பாரத மாதா திருப்பள்ளி எழுச்சி, பாரத மாதா நவரத்தின மாலை; பாரத தேவியின் திருத்தசாங்கம் ஆகியவை இந்தியத் தெய்லத்திற்குப் பாரதி சூட்டிய மணியாரங்கள்; தேசியத்தில் தெய்வ மணம் கமழும் கவிமாலைகள்.

இறை அன்பர்கள் தங்களை அடியார்க்கு அடியராகச் சொல்லிக் கொள்வது போலவும், அடியார் திருநாமங்களைப் போற்றுவது போலவும், பாரதி தம்மைப் பாரத தேவியின் தலைமைத் தொண்டர்களின் அடியவராகச் சொல்லிக் கொள்கிறுர். அவர் தம் பெயர்களின் ஏற்றத்தையும் எடுத்துக் கூறுகிறுர்.

''வெய்ய சிறைக்குள்ளே புன்னகை யோடுபோம்
ஐயன் பூபேந்தரனுக்கு அடிமைக் காரன்''

''எங்கள்

தாதாவாய் விளங்குறுநல் தாதாபாய்
நவுரோஜி சரணம் வாழ்க!''

என்று பூபேந்திரரையும்; நவரோஜியையும் தலைதாழ்த்தி வணங்குகிறார்.

''துன்பம் என்னும் கடலைக் கடக்கும்
  தோணி அவன்பெயர்
சோர்வு என்னும் பேயை ஓட்டும்
  சூழ்ச்சி அவன்பெயர்''

என்று பாரத மக்களின் அர்த்தமற்ற அச்சத்தை ஓட்டிய திலகரின் திருநாமத்தைப் போற்றுகிறார் மகாகவி சுப்ரமணிய பாரதியார்.

பாரதி, சக்தியையும் சிவனையும், கணபதிராயனையும், கந்தனையும், கண்ணனையும் பாடுவதோடு மட்டுமின்றிப் பாரத தேவியையும் பாடி இந்திய நாட்டைத் தெய்வமாக உயர்த்தித் தேசியத்தை சமயமாக உருவாக்கிக் கொடுக்கிறார்.

இது மகாகவி பாரதியாரின் சாதனைகளுக்குள் எல்லாம் பெரும் சாதனை என்றால் மிகப் பொருத்தமாக இருக்கும்.

இவ்வாறு பாரதி உலகு அளாவிய தம் ஒப்பற்ற சிந்தனையாலும் பின்னால் வரும் நிகழ்ச்சிகளைக் கணித்து முன்னதாகவே கூறிய தீர்க்க தரிசனத்தினாலும் தேசியம் என்னும் புதிய தொரு சமயத்தை உருவாக்கியமையாலும் கவிச்சக்கரவர்த்தியாகவே, உலக மகாகவியாகவே ஓங்கித் திகழ்கிறார்.

பாரதியின் பாடல்கள், நூல்கள், எழுத்துக்கள் சாகா வரம் பெற்றவை. மனித மேதாவிலாசத்துக்கு நினைவுக் களஞ்சியங்களாக ஊழி, ஊழிகாலத்துக்கு நிலைத்து நிற்கக் கூடியவை.

உணர்ச்சி ஆற்றல், கற்பனை ஆற்றல், ரசனை ஆற்றல், அழகுக்கலை ஆற்றல் முதலிய சிறந்த கவித்வ அம்சங்களை நிரம்பப் பெற்று விளங்குபவை மகாகவி பாரதியின் படைப்புக்கள்.

அவரிடம் கொழுந்துவிட்டு எரிந்த உலக சகோதர தத்துவம் என்னும் தீ உலக மகாகவிஞர்களின் நல் இசைப் புலமையுடன் இரண்டறக் கலந்து கவித்துவத்தின் அழகுக்கு அழகு செய்து கொண்டு சிரஞ்சீவித் தன்மையுடன் இருக்கிறது.

பாரதி காலம் தந்த கவிஞர். காலத்தைத் தன் கவிதைகளால் வென்ற மகா கவிஞர். அவர் படைப்புகளை ரோமன் லிபியில் ஒலி பெயர்ப்புச் செய்து எல்லா இந்தியப் பல்கலைக்கழகங்களிலும் பாட மாக வைக்கவேண்டும்.

இதன் மூலமாகத் தமிழின் அடிப்படைப் பண்புகளை அதன் ஒருமைப்பாட்டு உரிமையை, பிறமொழியினரும் அறிந்து கொள்ளத் துணைபுரிய வேண்டும். பாரதியின் தமிழ்ப் பாடலை ரோமன் லிபியில் ஒலிபெயர்ப்புச் செய்வதுடன், ரோமன் லிபியின் தமிழ்ச் சொற்களுக்கு அந்தந்த மொழியில் அகராதியையும் தயாரித்துக் கொடுக்க வேண்டும். இந்தப் பல்மொழித் தமிழ் அகராதிகளின் துணைகொண்டு பாரதியை நேரடியாக எல்லா உலக் மொழியினரும் கற்றுத்துய்ப்பர் என்பது என் எண்ணம். இதைப் பற்றி அறிஞர் பெருமக்கள் சிந்திக்க வேண்டுகிறேன்.

பாரதியின் பெருமையைப் போற்றும் வகையில் வங்கத்தின் தலைநகரான கல்கத்தாவில் இருக்கும் ஒரு தெருவிற்கு 'பாரதி சாரணி' என்று பெயர் சூட்டி உள்ளவங்க அரசின் விரிந்த ஒருமைப் பாட்டு செயல் பெரிதும் பாராட்டுக்குரிய செயலாகும். தமிழ் கூறும் நல்உலகில் வாழும் தமிழ் மக்கள் இதற்காக வங்க அரசுக்கும் வங்க மக்களுக்கும் நன்றி தெரிவித்துக் கொள்கிறார்கள்.

'பாரதி சாரணி' என்ற பெயரை கல்கத்தா நகரின் தெரு ஒன்றுக்கு வைப்பதன் மூலமாக மகாகவி பாரதிக்குப் புதிதாக ஒன்றும் தனிப்பெருமை ஏற்படாது.

பாரதியின் பெருமையை உணர்ந்த வங்க அரசுக்கும் வங்க மக்களுக்குமே இது மிகப் பெருமையாகும். ராமகிருஷ்ணரையும், விவேகானந்தரையும், தாகூரையும், பக்கிம் சந்திரரையும் பெற்ற வங்கத்தின் விசால மனத்தையும் காட்டுவதாகும்.

''பாரதி சாரணி'' என்ற பெயரின் மூலமாக வங்க மக்கள் தமிழின் தொன்மையை உணர்வார்கள். தமிழ்ப் பண்பாடு ஒரு காலத்தில் இந்தியா முழுவதும் பரவி இருந்த பண்பாடு என்ற வரலாற்று உண்மையைத் தெரிந்து கொள்வார்கள்.

வங்கத்தில் ஓடும் கங்கைக் கரையில் வாழ்ந்தவர்களின் சந்ததிகள்தான் இன்று காவிரிக் கரையில் வாழும் தமிழ் மக்கள் என்பதையும் புரிந்து கொள்வார்கள். நாம் எல்லோரும் இந்திய மக்கள் என்ற ஒருமைப்பாட்டு உரிமை உணர்வைப் பெறுவார்கள் என்பதில் சந்தேகம் இல்லை.

மகாகவி சுப்ரமணிய பாரதியாரின் லட்சியத்தை நாம் வாழ்க்கையிலும் கடைப்பிடித்து உயர்வோம்;

இதன் மூலமாக இந்தியாவெங்கும், ஏன்? உலகம் எங்கும் பரவி இருக்கும் தமிழ் மக்கள் 'யாதும் ஊரே யாவரும் கேளிர்!' என்ற,—

ஆன்மநேய ஒருமைப்பாட்டு உரிமைப் பண்பாட்டில் சிறந்த மக்கள் என்பதை உலக மக்களுக்கு உணர்த்துவோம். வணக்கம்

நன்றி! சத்திய கங்கை

---

# சிந்தனை விருந்து

— வ. பெருமான் —

☆ அவருக்கு வயதாகி விட்டது; இவருக்கு வயதாகி விட்டது என்று சொல்கின்றானே, அவ்வாறு சொல்கின்றவனுக்கும் வயதாகிக் கொண்டிருக்கின்றது என்பதை மறந்து விடுகின்றான்;

☆ கதிரவன் தான் இருப்பதைக் கண்ணுள்ளோர்க்கு ஒளியாலும் பார்வையற்றோர்க்கு வெப்பத்தாலும் உணர்த்துவது போல உண்மைப் பொருள் எல்லோராலும் உணரப்படுதல் வேண்டும்;

★ மறந்து விட்டேன் என்று சொல்லிக் கொண்டு அறியாமையை ஒரு முறை மறைக்கலாம்; இருமுறை மறைக்கலாம்; ஆனல் எப்போதும் மறைக்க முடியாது.

★ எல்லோரையும் நம்பி விடவும் முடியாது; ஒருவரையும் நம்பாமல் இருக்கவும் முடியாது. யாரை நம்புவது என்பதில் தான் மனிதனுடைய திறமை அடங்கியிருக்கின்றது.

★ கண் பார்வை குறைந்து விட்டால் கண்ணுடி அணிந்து கொள்ளலாம். காது சிறிது மந்தமாகி விட்டால் செவிக் கருவியைப் பயன்படுத்திக் கொள்ளலாம். பல்லே இழந்து விட்டால் பொய்ப்பல் கட்டிக் கொள்ளலாம்; காலே இழந்து விட்டால் செயற்கைக் கால் வைத்துக் கொள்ளலாம்; தலே வழுக்கையாகி விட்டால் தொப்பி போட்டுக் கொள்ளலாம்; ஆனுல் ஒழுக்கத்தை இழந்து விட்டால் இவ்விழப்பை எதைக் கொண்டும் ஈடு செய்ய முடியாது.

★ மீனைப் பெரிய பால் தொட்டியில் இட்டு வளர்த்தாலும் அது பாலேக் குடிக்காது, புழுவைத்தான் தின்ன விரும்பும், அது போலக் கீழ்மக்கள் உயர்ந்த சூழ் நிலேயில் இருந்தாலும் அவர்கள் சிந்தனே கீழ் நோக்கித்தான் செல்லும்.

★ இயற்கை குருடனைவிட, வேண்டும் என்றே பார்க்க மறுப்பவனே பெருங்குருடன்.

★ பசுவின் மடியில் பால் இருந்தாலும் நாம்தாம் பாலேக் கறக்க வேண்டும். அது போலப் பிறர் நமக்கு நன்மை செய்வதாக யிருந்தாலும் நாம்தாம் முயன்று பெறவேண்டும்.

★ கொடுப்பதற்கு மட்டும் தெரிந்தவன் உயர்ந்தவன்; கொடுக்கவும் வாங்கவும் தெரிந்தவன் இடையாயவன், வாங்குவதற்கு மட்டும் தெரிந்தவன் தாழ்ந்தவன்.

★ அன்புக்காக நட்புக் கொள்வது உயர்ந்தது. ஆகாயத்திற்காக நட்புக் கொள்வது இழிந்தது.

★ கடுகு போன்ற சிறு மூட்டுப்பூச்சி ஆறடி உயரமுள்ள மனிதனின் தூக்கத்தைக் கெடுத்து விடும், ஒரே ஒரு சிறு கொசு மிகப் பெரிய மனிதனுக்கு நோய் உண்டாக்கி விடும், துளி நஞ்சு பலரைக் கொன்று விடும், சிறு தேள் மிகப் பெரிய மனிதனையும் வேதனை உண்டாக்கி விடும், ஒரு தீப்பொறி ஆயிரம் வீடுகளை எரித்து விடும். தீங்கு பயக்கும் பொருள் எத்துணை சிறிதாகயிருந்தாலும் உடனே அடியோடு நீக்க வேண்டும்.

★ கடினம் என்பதும் எளிமை என்பதும் வேலைப் பளுவைப் பொறுத்ததன்று; மனநிலையைப் பொறுத்தது. ஒருத்திக்குப் பத்து பவுண்டு எடையுள்ள தன் குழந்தையைத் தூக்குவதற்கு எளிமையாயிருக்கும். ஆனால் அவளுக்கு ஐந்து பவுண்டு எடையுள்ள அடுத்த வீட்டுக் குழந்தையைத் தூக்க அதிகக் கடினமாகயிருக்கும். அன்பின் காரணமாகக் கடினமும் எளிமையாகத் தோன்றும்; அன்பின்மை காரணமாக எளிமையும் கடினமாகத் தெரியும்.

★ சோதனை இரு வகைப்படும்; ஒன்று பிறரைச் சோதிப்பது; மற்றொன்று ஒருவன் தன்னைத் தானே சோதிப்பது, பிறரைச் சோதிப்பதற்கு அறிவு மட்டும் இருந்தால் போதும். ஆனால் ஒருவன் தன்னைத் தானே சோதிப்பதற்கு அறிவு இருந்தால் மட்டும் போதாது; நேர்மையும் வேண்டும்.

★ துணியை வெளுக்க வெளுக்கத் தூய்மையடைகின்றது; பொன்னைப் புடத்தில் வைக்க வைக்க மெருகு ஏறுகின்றது; வைரத்தைப் பட்டை தீட்டத் தீட்ட ஒளி மிகுகின்றது; சந்தனத்தை அரைக்க அரைக்க மணம் கமழ்கின்றது; காட்டு வழியில் மக்கள் நடக்க நடக்கப் பாதை பண்படுகின்றது. அவை போல மனிதன் உழைக்க உழைக்க வாழ்க்கையில் முன்னேற்றம் அடைகின்றான்.

★ நகைமீது ஆசை இல்லாதவனுக்கு நகையை பற்றியே கவலையே இல்லை; கூந்தல்மீது ஆசை இல்லாதவனுக்குக் கூந்தல் நீளமாக வளரவில்லையே என்னும் கவலை இல்லை. தேவையும் ஆசையும் குறையக் குறையக் கவலை தானாகவே மறைந்து விடுகின்றது.

★ தாமரைக் குளத்தில் தவளை நீண்ட நாள் இருந்தாலும் தாமரையின் பெருமை தவளைக்குத் தெரியாது; கங்கையில் பல காலம் இருந்தாலும் கங்கையின் புனிதத் தன்மை மீனுக்குத் தெரியாது. வீணை மேதை வீட்டில் எருமை பல்லாண்டுகள் இருந்தாலும் வீணை நாதத்தின் அருமை எருமைக்குத் தெரியாது. கீழ் மக்கள் எவ்வளவு உயர்ந்த இடத்தில் இருந்தாலும் ஒருபோதும் முன்னேற்றமடைய மாட்டார்கள்.

★ நடக்கும் போது கால் தடுமாறிக் கீழே விழுந்தால் ஏற்படும் தீங்கு குறைவு. அவையில் பேசும் போது நா தடுமாறி விட்டால் ஏற்படும் தீங்கு மிகுதி.

★ குயிலைக் குரலால் அறியலாம்; மயிலை நடனத்தால் அறியலாம்; அன்னத்தை நடையால் அறியலாம்; அவை போல மனிதனை ஒழுக்கத்தால் அறியலாம்.

★ காலினால் நடப்பது கால்நடை; ஒழுக்கத்தால் நடப்பது நடத்தை. விலங்கிற்குரியது கால்நடை; மக்களுக்குரியது நடத்தை.

★ மக்களினின்றும் மக்களை வேறுபடுத்தி உயர்த்திக் காட்டுபவை பகுத்தறிவு, மொழி, ஒழுக்கம் இவற்றுள் ஒழுக்கம் தலையாயது

★ கருவாட்டு வாணிபம் செய்து ஆயிரம் ரூபாய் சம்பாதிப்பதை விடப் பூ வாணிபம் செய்து ஐந்நூறு ரூபாய் சம்பாதிப்பது மேல்

★ அரைத்த மாவை மீண்டும் மீண்டும் அரைப்பதைவிட அரிசியைப் போட்டு அரைப்பது மேல். அதுபோல் பழைய கருத்துக்களையே கிளிப்பிள்ளையைப்போல் காலமெல்லாம் ஒப்பித்துக் கொண்டிருப்பதைவிட ஏதாவது ஒரு நல்ல புதுக் கருத்தைச் சொல்லுவது உயர்ந்தது.

(தொடரும்)

---

# தமிழ்நாடு அணுவிரத சமிதிக்கு நன்கொடைகள்

டாக்டர் திரு. J. சோகன்லால் தூகட்
அமைந்தகரை ரூ. 3C8 00

நன்கொடையாளருக்கு அன்புமிக்க நன்றி.

ரா. சோவன்ராஜ்
செயலாளர்

---

If not delivered please return to

R. SOVANRAJ
Secretary Tamilnadu Anuvrat Samiti
C/o Continental Parts Co.
3, State Bank Street, Madras-600 002.

---

Published by R. Sovanraj, Secretary, Tamilnad Anuvrat Samiti
3, State Bank Street, Madras-600 002 and Printed by
K. Mutukrishnan at the Poonkuzhali Achagam,
Madras-600 014 Editor : Sa Nedunchezhian M.A ,